

# பகவத் பாதை

தமிழ் மாத இதழ்



படுக்க வேண்டிய நேரத்தில் படுக்கைக்குச் செல்ல வேண்டியது நமது கடமை. படுக்கைக்கு சென்ற பிறகு எத்தகைய சிந்தனையாக இருந்தாலும் அது பற்றி கவலை கொள்ளத் தேவையில்லை. அவைகளின் மீதேறி சவாரி செய்து அவற்றை சிந்திப்பாக மாற்றாமல் இருந்தால் மட்டும் போதும். அதனைச் சிந்திப்பாக மாற்றி விட்டோமானால் அது நமது படுக்கையையே உலுக்கிப்போட்டு நமது தூக்கத்தையும் விரட்டியடித்துவிடும். தூக்கம் தாமாக நிகழட்டும். நாமாகத் தூங்க வேண்டாம்.

- ஸ்ரீ பகவத்



## சிந்தனையும் சிந்திப்பும்

## Thought and Thinking... – புதிய நூல்

சிந்தனை (Thought) என்றால் என்ன, சிந்திப்பு (Thinking) என்றால் என்ன என்பதை பிரித்து புரிந்து கொண்டாலே போதும், ஆன்மீகத்தில் தேடுதல் இல்லாதவர்களால் கூட ஞானத் தெளிவு பெற்று மனப் பிரச்சினையில் இருந்து விடு பட்டு விடுதலையை பெற முடியும் என்பதை விளக்கிச் சொல்கிறது இந்நூல்.

மனம் என்னும் மர்ம முடிச்சுகள் நிறைந்த பூட்டைத் திறக்கும் மிகச் சிறிய சாவிதான் இந்நூல். இமயமலையைப் போன்றிருக்கும் நமது பிரச்சினைகளுக்கெல்லாம் இப்படியும் ஒரு தீர்வு இருக்க முடியுமா என ஆச்சரியபட வைக்கும் இந்நூல், தீயப் பழக்கங்களில் இருந்து விடு படுவதற்கு வழி வகுப்பதோடு பல பள்ளி மற்றும் கல்லூரி மாணவர்களுக்கு கூட கல்விக்கு தடையாக இருந்த பல மனப் பிரச்சினைகளில் இருந்து விடு பட்டு கல்வியின் பக்கம் கவனம் திரும்புவதற்கும் தீர்வாக அமைகிறது.

வாழ்க்கையில் தொழிலில் வீழ்ச்சி, குடும்பப் பிரச்சினை, காதலில் தோல்வி, தாழ்வு மனப்பான்மை போன்ற பிரச்சினைகளால் மனப் பாதிப்படைந்தவர்களுக்கும் அதிலிருந்து விடு பட்டு வெற்றி பெற தீர்வாக அமைகிறது இந்நூல்.

இலட்சக்கணக்கானோரின் இதயப் புண்களைக் குணமாக்கி அவர்களையெல்லாம் மீட்டுக் கொடுத்த இந்நூல் மேலும் பலருக்கு பயன்பட வேண்டுமென்ற நோக்கில் பரிசில் விலையில் ரூ.10க்கு 5000 பிரதி வெளிவர இருக்கிறது.

இந்த ஞானத் தெளிவை தன் நண்பர்கள் மற்றும் உறவினர்களுக்கு கொண்டு செல்ல விரும்புவர்கள் பரிசில் விலையில் உள்ள இந்த நூலை வாங்கி திருமண நிகழ்ச்சிகளிலும் மற்ற விழாக்களிலும் நன்கொடையாக வழங்கலாம்.

இந்நூலை பரிசில் விலையில் வெளியிட ரூ.10000 வழங்கும் ஐந்து நன்கொடையாளர்கள் தேவைப்படுகின்ற நிலையில்...

1. திரு. **மோகன்ராம்,** சென்னை
2. திரு. **தனசேகரன்,** ஆரணி, திருவண்ணாமலை
3. திருமதி. **வசந்தி சரவணன்,** புரசைவாக்கம், சென்னை.
4. திருமதி. **முத்துலட்சுமி சரவணன்,** சென்னை.

ஆகியோர் நன்கொடை வழங்கியிருக்கிறார்கள். அவர்களுக்கு ஸ்ரீ பகவத் மிஷன் சார்பில் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

**மேலும் ரூ.10000 வழங்கும் ஒரு நன்கொடையாளர் தேவைப்படுகிறார்.** வாய்ப்புள்ளவர்கள் தங்களை இணைத்துக் கொள்ளுமாறு அன்புடன் அழைக்கின்றோம்.

ஸ்ரீபகவத் மிஷன்,
சேலம்.

## உள்ளே



கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? அல்லது பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?




Sri Bagavath Mission

31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu,INDIA.
**V. A. P. Sharavanan : 99942 05880**
**Dr. N. Kailasam : 94432 90559**
**K. S. Jeevamani : 97891 65555**

www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com



This Book Designed By:
PRAKASH PRINTERS, SALEM
Mobile : 9843786655

# தூக்கம்

– ஸ்ரீ பகவத்



**“எனக்கு சரியாகத் தூக்கம் வரவில்லை. தூக்க மாத்திரை கூட போட வேண்டியதுள்ளது. தூக்கம் வருவதற்கு நான் என்ன செய்ய வேண்டும்?”**

– இப்படிப் பலர் நம்மிடம் கேட்பதுண்டு.

ஒரு முறை திருநெல்வேலி மாவட்டம், சிவசைலத்திலிருக்கும் கடனா நதிக்கு மேலுள்ள மலையிலிருக்கும் அத்திரி மகரிஷி ஆஸ்ரமம் என்னும் இடத்திற்கு ஆன்மிக நண்பர்களுடன் சென்று தங்கியிருந்தேன்.

அதனை ஒட்டி இஸ்லாமியர்கள் வழிபாடு செய்யும் குகை ஒன்றும் இருந்தது.

அந்தக் குகையில் தவம் செய்வதற்காக இஸ்லாமிய சாது ஒருவர் வருவதுண்டு.

அவர் வரும் போது, நாங்களும் அங்கே தங்கியிருந்தால் அவரைச் சந்திக்கலாம் என நாங்கள் பேசிக் கொண்டோம். ஆனால் அவர் எப்போது வருவார் என எவருக்குமே தெரியாது.

ஆனால் நாங்கள் பேசிக் கொண்ட மறுநாளே அவர் அந்தக் குகைக்கு வந்திருக்கிறார். அவர் வந்தது கூட எங்களுக்குத் தெரியாது. ஆனால் அவரே எங்களைத் தேடிக் கொண்டு வந்து விட்டார்.

அவருடன் பேசிக் கொண்டிருந்தோம்.

அவர் என்னிடம் கேட்டார், “எத்தனை மணிக்கு படுப்பீர்கள்?”

அவர் ஏன் இப்படி கேட்டார் என்பது எனக்கு விளங்கவில்லை.

பொதுவாக ஆன்மிக சாதகர்களிடம் “எத்தனை மணிக்கு தூக்கத்திலிருந்து எழுந்து கொள்வீர்கள்?” என்ற கேள்வியைத்தான் கேட்பதுண்டு.

ஏனெனில் அதிகாலை மூன்று அல்லது நான்கு மணிக்கு பிரம்ம முகூர்த்தத்தில் எழுந்து தவ தியானங்களில் ஈடுபட வேண்டும் என்பது ஆன்மிக உலகின் சம்பிரதாயம்.

ஆனால் இவரது கேள்வி துயில் எழுவதைப் பற்றி இல்லாமல், எப்போது படுத்துத் தூங்குகிறீர்கள் என்று தூங்கச் செல்வதைப் பற்றி இருந்தது எனக்கு வித்தியாசமாக இருந்தது.

இருந்தாலும் “ஏன் இப்படிக் கேட்கிறீர்கள்?” என அவரிடம் அது பற்றி விளக்கம் கேட்காமல்,

“இரவு ஒன்பது அல்லது பத்து மணிக்கு தூங்கச் செல்வேன்” என அவருக்குப் பதில் கொடுத்தேன்.

ஆனால் அவரோ, ஒரு வித ஆதங்கத்துடனும் அக்கறையுடனும் “அய்யய்யோ! அப்படித் தூங்கக் கூடாது! இரவு தான் நமக்கெல்லாம் முக்கியமான நேரம். இரவில் நாம் தூங்கவே கூடாது. இரவில் தான் நாம் நமது சாதனைகளையெல்லாம் செய்ய வேண்டும்” என்று கூறினார்.

இது நடந்து சுமார் முப்பது ஆண்டுகளுக்கு மேலிருக்கும். அதன் பிறகு அவரைச் சந்திக்கும் வாய்ப்பு கிடைக்கவில்லை.

அந்த சாது அவ்வாறு எங்களிடம் கூறி விட்டு, அவரோடு வந்தவர்களுடன் அவரது குகைக்குப் போய் விட்டார்.

அவருடைய உபதேசத்தின் பாதிப்பால் நாங்களும் சற்று நேரம் கூடுதலாகக் கண் விழித்துத் தியானம் செய்து பார்த்தோம். ஆனால் அரை மணி நேரத்துக்கு மேல் தாக்குப் பிடிக்க முடியவில்லை. நிம்மதியாகப் படுத்துத் தூங்கி விட்டோம்.

“தூக்கத்தை வென்றார் துக்கத்தை வென்றவரே”

என சித்தர் பாடல் ஒன்று உண்டு.

இப்படி இரவுத் தூக்கத்துக்கு எதிராகக் கூட ஒரு கருத்து உலா வந்து கொண்டிருக்கிறது.

எனது உறவினர் ஒருவர் கிராமத்தில் வசித்து வந்தார். அவர் கிராமத்து கோயில் நிர்வாகப் பொறுப்பிலும் இருந்து வந்தார். அவருக்கும் ஒரு சிறப்பியல்பு உண்டு.

அவருடைய கிராமத்துக் கோயிலில் வருடம் ஒருமுறை கொடை விழா என்ற வருடாந்திர நிகழ்ச்சி நடைபெறும்.

அந்த நிகழ்ச்சி தொடர்ந்து ஐந்து தினங்கள் இரவும் பகலுமாக நடைபெறும்.

இந்த உறவினர் இந்த ஐந்து நாட்களும் உறங்குவது கிடையாது. இரவிலும் தூங்க மாட்டார் பகலிலும் தூங்க மாட்டார். ஆனால் அவரிடம் எவ்விதத் தூக்கக் கலக்கமும் இருக்காது. உற்சாகமாகவே காணப்படுவார்.

கோயில் நிகழ்ச்சி முடிந்த மறு தினத்திலிருந்து மூன்று நாட்கள் தொடர்ந்து இரவும் பகலுமாகத் தூங்கி முடித்து விடுவார்.

அவரைப் போன்று விழித்திருப்பதும், கஷ்டமானதுதான், அவரைப் போன்று தூங்குவதும் கஷ்டமானதுதான்.

இவற்றையெல்லாம் நாம் விதிவிலக்குகளாகவே எடுத்துக் கொள்ள வேண்டும்.

ஒரு சராசரி மனிதரை எடுத்துக் கொண்டால் இரவில் முறையான தூக்கம் அவசியமான ஒன்றே ஆகும்.

“இரவில் எனக்கு தூக்கமே வருவதில்லை. ஏதாவது சிந்தனைதான் வந்து கொண்டே இருக்கிறது. தெருவில் யாராவது பேசிக் கொண்டு போனால் கூட எனக்குத் தெரிகிறது. இரவு முழுவதும் புரண்டு புரண்டு படுத்துக் கொண்டிருக்கிறேன். சரியான தூக்கம் இல்லாததால் மறுநாள் மிகவும் சோர்வாக உள்ளது.”

– இப்படி தூக்கம் வராமல் சிரமப்படுபவர்கள் கூறுவார்கள்.

‘‘உங்களுக்கு அருகே எவராவது படுத்திருப்பார்களா?” என்று அவர்களிடம் கேட்டால்

‘‘ஆமாம், படுத்திருப்பார்கள்’’ என்று கூறுவார்கள்.

‘‘இரவு முழுவதும் தூங்கவில்லை என்று அவர்களிடம் நீங்கள் கூறினால் அவர்கள் என்ன கூறுவார்கள்? ஆமாம் நீங்கள் தூங்கவில்லை என்று கூறுவார்களா? அல்லது நீங்கள் நன்றாகத் தூங்கினீர்கள். உங்களிடமிருந்து குறட்டைச் சத்தம் கூட வந்தது என்று கூறுவார்களா?”

– இப்படி அவர்களிடம் கேட்டால் அவர்கள் என்ன கூறுவார்கள்?

“ஆமாம்; என்னிடமிருந்து குறட்டை வந்ததாகத்தான் கூறுகிறார்கள். ஆனால் நான் தூங்காமல் விழித்திருப்பதும் எனக்கு நன்றாகத் தெரிகிறது. எனக்கு என்ன நடக்கிறது என்பதே புரியவில்லை.”

– இப்படிப் பலர் கூறுகிறார்கள்.

இவர்களுக்கு என்ன நடக்கிறது?

உண்மையில் அவர்கள் தூங்கியிருக்கிறார்களா? அல்லது தூக்கமில்லாமலிருக்கிறார்களா? தூங்காமலிருக்கும் ஒருவரிடமிருந்து குறட்டை எவ்வாறு ஏற்படும்?

ஒருவர் தூக்கமின்றி சிரமப்படுவதாக வைத்துக் கொள்வோம். அவர் என்ன செய்வார்? தூக்கம் வரவில்லையே என்ற சிந்தனை அவரிடம் ஓடிக்கொண்டிருக்கும். அந்த சிந்தனை ஓடிக்கொண்டிருக்கும் நிலையிலேயே அவருக்கு தூக்கமும் வந்து விடும். அப்படித் தூக்கம் வந்தாலும் கூட தூக்கம் வரவில்லையே என்ற சிந்தனையும் தொடர்ந்து ஓடிக்கொண்டுதான் இருக்கும்.

அதனால் அவரைப் பொறுத்த வரையிலும், “தூக்கம் வரவில்லையே, வரவில்லையே” என்ற சிந்தனை தொடர்ந்து இருந்து கொண்டிருப்பதால், தூங்கவில்லை என்ற முடிவுடனேயே அவரது செயல்பாடு இருக்கும்.

ஆனால் அந்த சிந்தனைக் கிடையிலும் அவர் தூங்கியிருந்த காரணத்தினால்தான் அவரிடமிருந்து குறட்டையொலியும் வெளிப்பட்டிருக்கிறது.

“தூக்கம் வரவில்லையே, வரவில்லையே” என்ற எண்ணங்களுக்கு இடையே நம்மையறியாமல் நாம் தூங்கியும் விடுகிறோம். பிறகு அந்த எண்ணமே நம்மை விழித்தெழவும் வைத்து விடுகிறது. புரண்டு படுக்கவும் வைத்து விடுகிறது.

இப்படி நாமே நம்மையறியாமல் நமது தூக்கத்துக்கு இடையூறு செய்து கொள்கிறோம்.

நமது தூக்கத்தை நாம் எவ்வாறுதான் அணுகுவது?

தூங்குவதிலும் நெறிமுறைகள் ஏதாவது உண்டா?

தூங்குவதற்கு நாம் எவ்வாறு முயல்வது?

“ஒன்றிலிருந்து நூறு வரை எண்ண வேண்டும்” எனச் சிலர் கூறுவதுண்டு.

“காலையில் எழுந்தது முதல் படுக்கைக்கு வரும் வரை நடந்த நிகழ்ச்சிகளை ஒருமுறை மீண்டும் நினைவுபடுத்திக் கொள்ள வேண்டும்” – என்று சிலர் கூறுவதுண்டு.

“ஆழ்ந்து சுவாசம் செய்து விட்டுப் படுக்க வேண்டும்.”

“பிரார்த்தனை செய்து விட்டோ அல்லது நல்ல இசையைக் கேட்டோ மனதை நல்ல அமைதிக்குக் கொண்டு வந்து விட்டுப் படுக்க வேண்டும்.”

“இரவில் ஒருமுறை குளிக்க வேண்டும்.”

“மோசமான சிந்தனைகளோடு படுக்கைக்குச் செல்லக் கூடாது.”

– இப்படியும் பலவிதமான ஆலோசனைகள் வழங்கப்படுகின்றன.

இப்படிக் கூறப்பட்ட கருத்துகளில் இரண்டாவதாகக் கூறப்படும் ஆலோசனையில் மட்டும் எனக்கு உடன்பாடு கிடையாது. காலையிலிருந்து மாலை வரை நடந்த நிகழ்வுகள் மீண்டும் ஒருமுறை எண்ணிப் பார்க்க வேண்டும் என்று இந்த ஆலோசனை கூறுகிறது. ஜே.கிருஷ்ணமூர்த்தி கூட இந்த ஆலோசனையை அங்கீகரித்துப் பேசியுள்ளார். ஆனால் அவர் தூக்கம் ஏற்படுவதற்காக இதனைப் பரிந்துரை செய்யவில்லை. தேவையற்ற கனவுகள் ஏற்படாமல் இருப்பதற்காக அவர் இந்த வழி முறையைப் பரிந்துரைக்கிறார்.

ஆனால் சாதாரண நிகழ்வுகளாக இருந்தால் பாதகமில்லை. அதுவே பிரச்சினைக்குரிய நிகழ்வாக இருக்கும் பட்சத்தில், மீண்டும் அது நமது மனதில் கிளர்ச்சியைத்தான் தூண்டி விடும்.

அதற்காக மற்ற ஆலோசனைகளைத் தீவிரமாகப் பின்பற்ற வேண்டும் என்ற கட்டாயம் இல்லை.

பொதுவாகக் கூறப் போனால் தூங்குவதற்காக – தூங்குவதை நோக்கமாகக் கொண்டு நாம் எதனையும் செய்யக் கூடாது. ஏனெனில் தூக்கத்தை எதிர் பார்ப்பதே தூக்கத்துக்கு எதிரி.

எந்த ஆலோசனைகளைப் பின் பற்றினாலும், அது நம்முடைய பொது நன்மைக்கான ஒன்றாக மட்டுமே எடுத்துக் கொண்டு செயல்பட வேண்டும்.

அதில் தனிப்பட்ட எந்த எதிர்ப்பார்ப்பை இணைத்துக் கொண்டாலும் அது தூக்கத்தைப் பாதித்து விடும்.

தூக்கம் என்பது எந்த எதிர்பார்ப்பும், எந்த முயற்சியுமின்றி, தாமாக ஏற்பட வேண்டும்.

“நான் தூங்க முயல்கிறேன்” என்பது தவறான அணுகுமுறையாகும்.

படுக்க வேண்டிய நேரத்தில் படுக்கைக்குச் செல்ல வேண்டியது நமது கடமை.

படுக்கைக்குச் சென்ற பிறகு நாம் வேறு எந்தக் கடமைகளையும் ஏற்படுத்திக் கொள்ளக் கூடாது.

படுக்கைக்குச் சென்ற பிறகு அங்கு சிந்தனைகளுக்கு மட்டுமே இடம் உண்டு. சிந்திப்புகளுக்கு இடம் கிடையாது. **Thought** இருக்கலாம், **Thinking** ஐ உருவாக்கக் கூடாது.

சிந்தனை என்பது நமது பங்களிப்பு எதுவும் இல்லாமல் அதுவாக – தாமாக உருவாவது.

சிந்திப்பு என்பது நாமாக உருவாக்குவது.

தாமாக ஏற்படும் சிந்தனைகளின் மீது நாம் சவாரி செய்வோமானால் அதுவே சிந்திப்பாக மாறி விடும்.

சிந்திப்பு மட்டுமே தூக்கத்துக்கு எதிரி. சிந்தனை எதிரியல்ல.

கனவுகள் கூட சிந்தனைகளால் உருவாக்கபட்டவைதாம். அவை தூக்கத்துக்கு எதிரானவை அல்ல. தூக்கத்தில்தான் கனவுகளே உருவாகின்றன.

எத்தகைய சிந்தனையாக இருந்தாலும் அதுபற்றிக் கவலை கொள்ளத் தேவையில்லை. அவைகளின் மீதேறிச் சவாரி செய்து அவற்றை சிந்திப்பாக மாற்றாமல் இருந்தால் மட்டும் போதும்.

சிலருக்கு படுக்கைக்குச் சென்ற பிறகு தான் மறுநாள் செய்ய வேண்டிய பணிகளுக்கான புதுப்புது கருத்துகள் – ஐடியாக்கள் உருவாகும். அதைப் பற்றிப் பிடித்து மேலும் சிந்தித்து முடிவெடுக்க வேண்டும் என்ற ஆவலையும் அவை தூண்டிவிடும்.

அது எவ்வளவு அபூர்வமான ஐடியாவாக இருந்த போதிலும் அதனையும் சாதாரண சிந்தனையாக – தாமாகத் தோன்றித் தாமாகவே மறைந்து விடும் சிந்தனையாகவே கருத வேண்டும்.

சிந்திப்பதற்கு ஒரு வாய்ப்பு கிடைத்ததாக எண்ணி எழுந்து உட்கார்ந்து விடக் கூடாது.

படுக்கைக்குச் சென்ற பிறகு சிந்திப்புக்கு மட்டும் இடம் கொடுக்காமலிருந்தால் படுக்கைக்குச் சென்ற பிறகு ஏற்படும் எந்தச் சிந்தனைகளைக் கண்டும் பயப்படத் தேவையில்லை. அது எவ்வளவு மோசமான சிந்தனையாக இருந்தாலும் சரி, அதுவும் நமது தூக்கத்துக்கான தாலாட்டே தவிர வேறு அல்ல.

ஆனால் எந்தச் சிந்தனை மீதாவது ஏறிச் சவாரி செய்து அதனைச் சிந்திப்பாக மாற்றி விட்டோமானால் அது நமது படுக்கையையே உலுக்கிப் போட்டு நமது தூக்கத்தையும் விரட்டியடித்து விடும்.

தூங்குவதற்காக நாம் ஏதாவது முயற்சியில் ஈடுபட்டோமானால் நமது அத்தனை முயற்சிகளுமே சிந்திப்புதான். அவை அனைத்துமே தூக்கத்துக்கு எதிரிகள் தாம்.

தூக்கம் தாமாக நிகழட்டும். நாமாகத் தூங்க வேண்டாம்.





V.A.P. சரவணன்
செல் : 99942 05880



# கேள்வி? பதில்...

## பில்லி, சூனியம் ஞானியை பாதிக்குமா?



**கேள்வி:**

பில்லி, சூனியம், ஏவல், செய்வினை தீய சக்திகள் போன்றவை ஞானத்தெளிவு பெற்ற ஒருவரை பாதிக்குமா? அதற்கான வாய்ப்புகள் உண்டா? அப்படி பாதிப்புகள் உண்டு எனில் அதிலிருந்து நம்மை எப்படி பாதுகாத்துக் கொள்வது?

**பதில்:**

புரிதலில் தெளிவு பெற்ற ஒருவருக்கு மேற்சொன்ன எவைகளாலும் பாதிப்பு ஏற்படுவதற்கு வாய்ப்புகள் இல்லை. புத்தரின் வாழ்க்கையில் புத்தருக்கு இது போல் பில்லி, சூனியம் ஏவல் போன்றவை வைக்கப்படுகின்றன. அவைகளால் புத்தருக்கு எந்த பாதிப்பும் ஏற்படவில்லை. மாறாக புத்தருக்கு யார் பில்லி, சூனியம் வைத்தார்களோ அவர்களையே அது பாதித்தது.

புத்தருக்கு ஏன் பாதிப்பு ஏற்படவில்லை என்பதை புரிந்து கொள்வோம்.

நம்மை ஒருவர் எதிரியாக நினைத்துக் கொண்டு இருந்தாலும், நாமும் அவரை எதிரியாக பார்த்தால் மட்டும் தான் அவர் வைத்த செய்வினையே வேலை செய்யும்.

ஞானப்புரிதலில் தெளிவு பெற்ற ஒருவர், தனக்கு ஏற்படும் எந்த எண்ணங்களையும் உணர்வுகளையும் தானே வலிய போய் பற்றிப் பிடிப்பதில்லை. எல்லா எண்ணங்களும், உணர்வுகளும் தாமாக தோன்றி தாமாகவே மறைகின்றன என்ற புரிதல் மட்டுமே புரிந்தவருக்கு இருக்கும். அதனால் புரிந்தவருக்கு யார் மீதும் எதிர்ப்பு உணர்வு தொடர்ந்து இருப்பதற்கு வாய்ப்பு இல்லை. அப்படியே இருந்தாலும் அது குறுகிய காலத்தில் மறைந்து விடும். மேலும் தொடர்ந்து எதிர்ப்பு உணர்வை இருப்பு கட்டி வஞ்சமாக ஏற்படுத்திக் கொள்ளும் வாய்ப்பே இல்லை. ‘எல்லா எண்ணங்களும், உணர்வுகளும் நிலை பெறாமல் பிரவகிப்பது இயற்கை’ என்று புரிந்து கொண்டவரால் மற்றொருவரை எதிரியாகவோ வஞ்சத்துடனோ பார்க்க முடியாது.

நம்மை எதிர்ப்பவர்களிடம் நாம் ஒதுங்கி போவோமே தவிர ஒருபோதும் அவர்களை எதிர்க்கவோ வஞ்சிக்கவோ மாட்டோம். அதனால் நம்மை எதிர்ப்பவர்கள் வைத்திருக்கும் பில்லி, சூனியம், தீய சக்திகள் நம்மிடம் வேலை செய்யாது.

நமக்கு பில்லி, சூனியம் வைப்பவர்களுக்கு நம்முடைய மனநிலை எப்படி இருக்கும் என்று தெரிந்திருப்பதற்கு வாய்ப்பு இல்லை. அதனால் அவர்கள் பில்லி, சூனியம் வைத்திருந்தாலும் அதனால் ஏற்படும் எந்த எண்ண உணர்வுகளையும் நாம் பிடித்து வைக்காத பிரவாக மனநிலையிலேயே நாம் இயல்பாக இருப்போம். அவர்களை எதிரியாக நினைத்து வஞ்சிப்பவராக வைத்துப் பார்க்கும் தீவிரமான மனநிலை நம்மிடம் ஒரு போதும் இருக்காது. எப்படி எல்லா எண்ணங்களும் உணர்வுகளும் வந்து செல்கின்றனவோ அப்படியே மேற்சொன்ன எண்ணங்களும் உணர்வுகளும் வந்து போகும். அதனால் அந்த உணர்வு நம்மை பாதிக்காது.

ஓர் எதிர்ப்பு உணர்வுக்கு சரியான மற்றொரு எதிர்ப்புணர்வு இருந்தால் மட்டுமே மோதல் ஏற்படும். அதனால் ஒன்றினால் மற்றொன்று பாதிப்படையும். ஒன்று மட்டும் எதிர்ப்போடு இருந்து மற்றொன்று எதுவுமற்றதாக பிரவாக நிலையில் பிரவகித்தால் எதிர்ப்போடு இருந்த அந்த ஒன்றுக்கே அனைத்து பாதிப்பும் வந்து சேரும்.

பொதுவாக இரண்டு நபர்கள் ஒருவரை மற்றொருவர் எதிர்க்கும் போதுதான் எதிர்ப்பே வலுபெறும். ஒருவர் மட்டும் எதிர்த்து மற்றொருவர் எதிர்க்காத போது முழுமையான எதிர்ப்பாக செயல்பட வாய்ப்பு இல்லை. எதிர்த்து சண்டையிட தயாராக இல்லாத ஒருவராக நாம் இருக்கும் போது எதிரியால் நம்மை என்ன செய்து விட முடியும். அவர்களின் எதிர்ப்பும் வஞ்சமும் நம்மை ஒரு போதும் பாதிக்காது.

நமக்கு நன்றாக தெரியும், புரிதலுக்கு முன் நாம் ஏதாவது ஓர் எண்ணத்தையோ உணர்ச்சியையோ பற்றி பிடித்தால் பிறகு அதனோடு போராடி நாம் பற்றி பிடித்த எண்ணம் உணர்ச்சியிலிருந்து விடுபட நாம் படாதபாடு படுவோம். இதை வாழ்க்கையில் பல நிகழ்வுகளில் சந்தித்திருக்கிறோம். எண்ணம் உணர்வுகளின் பிடியிலிருந்து விடுபடுவதைத்தான் விடுதலை என்று கூறுகிறோம். இது தாமாக நிகழ்வது முரண்படத் தேவையில்லை என்பதை புரிந்து கொள்வதைத்தான் ஞானம் என்று குறிப்பிடுகிறோம்.

நம்மை எதிரியாக நினைத்து செயல்படுவர்களுக்கு இந்த மனத்தின் இயக்கத்தை பற்றிய புரிதல் எதுவும் இருக்காது. நாமாக வலிய போய் ஒரு எண்ணத்தையோ உணர்வையோ பற்றி பிடித்தால் அதன் தாக்கம் என்ன என்பது நமக்கு நன்றாக தெரியும். அது போல் தான் அவர்களாக வலிய போய் பற்றி பிடிக்கும் எதிர்ப்பு எண்ணமும் உணர்வும் அவர்களை நிம்மதியாக இருக்க விடாது. அவர்களுடைய மனம் எப்போதும் தூக்கமின்றி பரபரப்பாகவும், கொந்தளிப்பாகவும் இருக்கும்.

நம் மீது அவர்கள் வெளிப்படுத்தும் எதிர்ப் புணர்வை நாம் வழக்கமாக ஏற்படும் எண்ண உணர்வை போல்தான் பார்ப்போம். நாம் எந்த எண்ண உணர்வுக்கும் தனியாக முக்கியத்துவம் கொடுக்க மாட்டோம். நம்மை எதிர்ப்பவர்களுக்கு எதிர்ப்பு உணர்வு மட்டுமே மனம் முழுவதும் நிறைந்து இருக்கும். அவர்களுக்கு அவர்கள் மனதில் நிறைந்து இருக்கும் எதிர்ப்புணர்வு ஒன்று போதும் எல்லா விதமான பாதிப்புகளுக்கும்.

உதாரணமாக ஒரு சண்டை காட்சியில் சமமான பலம் கொண்ட இருவர் சண்டை போடும் போது தான் சண்டை நீடிக்கும். அதில் ஒருவர் சண்டையிட தயாராக இல்லை என்றாலும் சண்டை நடைபெறாது. ஒருவர் மட்டும் கொண்டுள்ள எதிர்ப்புணர்வு மற்றொருவர் சண்டையிட தயாராக இல்லாத போது மொத்த எதிர்ப்புணர்வின் பாதிப்பும் எதிர்ப்புணர்வு கொண்டவரையே சாரும்.

மனதை பற்றிய புரிதல் இல்லாத போது நமது மனமே இரண்டு பகுதிகளாக பிரிந்து நின்று ஒன்றை மற்றொன்று எதிர்த்து சண்டை போட்டுக் கொண்டு இருந்தது. மனதை பற்றிய பகவத் ஐயாவின் புரிதல் கிடைத்த பிறகு மனதை எதிர்த்து மனமே சண்டை போடுவதிலிருந்து விடுபடுகிறது. எல்லா எண்ண, உணர்வும் தோன்றி மறைவது இயற்கை என்பதை புரிந்து கொள்கிறோம். அதனால் எல்லா எண்ண உணர்வுகளும் நம்மிடம் நீடிக்காமல் மறைந்து விடுகிறது.

ஆனால் அவர்களுக்கு மனதை பற்றிய புரிதல் இல்லாததால் தான் எதிர்ப்புணர்வை விடாமல் தொடர்ந்து போராடி முடிவுக்கு கொண்டு வராமல் நீடித்து விடுகிறார்கள். பிறகு அவர்கள் ஏற்படுத்திக் கொண்ட மன எதிர்ப்பு உணர்வும், எண்ணமும் அவர்களையே பாதித்து விடுகிறது. இப்படிதான் அவர்கள் வைத்த பில்லி சூனியம் புரிந்தவர்களை பாதிக்காமல் அவர்களையே பாதித்து விடுகிறது.

**"புரிந்தவனுக்கு எந்த தீய சக்தியாலும்**
**பாதிப்பு ஏற்படுத்த முடியாது."**

# ஸ்ரீ பகவத் பவன் – புரவலர்கள்

அன்பு உள்ளங்களுக்கு ஓர் அன்பான அழைப்பு,

ஸ்ரீ பகவத் மிஷன் என்பது பணப்புழக்கம் மிகுந்த ஒரு கார்ப்பரேட் நிறுவனம் அல்ல. கட்டணம் வாங்கிக் கொள்ளும் கல்வி நிறுவனமும் அல்ல. ஐயா அவர்களுக்கு தங்கியிருக்க வீடு ஒன்று தேவைப்பட்டது. நம் அனைவரது ஒத்துழைப்பாலும் **ஸ்ரீ பகவத் பவன்** உருவானது. தற்போது அந்த இல்லம் ஐயாவின் இருப்பிடமாகவும் கற்றிட வருவோரின் குருகுலமாகவும், நம் அனைவரது பண்ணை வீடாகவும் செயல்பட்டு வருகிறது. ஸ்ரீ பகவத் பவனின் நித்திய நிர்வாகச் செலவினங்களுக்கான நித்திய நிதி ஒன்றும் தேவைப்படுகிறது.

'நிரந்தர வைப்பு நிதி எதனையும் தற்போது உருவாக்க வேண்டாம்' என்று ஐயா கூறிவிட்டதால் நிரந்தரப் **புரவலர்** குழு ஒன்றை உருவாக்க முடிவு செய்துள்ளோம். முதற்கட்டமாக 100 ஆர்வலர்கள் கொண்ட புரவலர் குழு ஒன்று மே மாதம் முதல் தொடங்கப்பட்டுள்ளது. அதன்படி ரூ.1000 முதல் ஏதாவது ஒரு தொகையை மாதந்தோறும் அல்லது ரூ.12000 முதல் ஏதாவது ஒரு தொகையை வருடந்தோறும் வழங்கும் ஆர்வம் உள்ளவர்கள் தங்களை ஸ்ரீ பகவத்பவனின் புரவலர்களாக இணைத்துக் கொள்ளலாம். அதற்காக ஏற்றுக்கொண்ட முழுத்தொகையையும் மாதந்தோறும் வழங்கியே ஆகவேண்டும் என்ற நிபந்தனை எதுவும் புரவலர்களுக்குக் கிடையாது.

நமது வேண்டுகோலை ஏற்று புரவலர்களாக இணைந்தவர்கள் :

1. திரு. **சரவணன்,** புரசைவாக்கம், சென்னை.
2. திரு. **வீரன்சுப்பு (ஏ) இராஜேஸ்,** புதுக்கோட்டை.
3. திரு. **கணேஷ்,** கோவை.
4. திருமதி. **முத்துலட்சுமி சரவணன்,** சென்னை,
5. திரு. **இரகு,** கிருஷ்ணகிரி.
6. திரு. அஃகு ஹீலர். **உமர் ஃபாரூக்,** கம்பம்.
7. திரு. **சேகர்,** கத்தார்.
8. திரு. **குணாலன்,** கோவை .
9. திரு. **சம்பத்,** சென்னை.
10. திரு. **வெங்கட்ராமன்,** சென்னை.
11. திரு. **இராஜகோபால்,** பரமத்தி வேலூர்.
12. திரு. **பாலசுப்ரமணி,** பரமத்தி வேலூர்.
13. திரு. **பாரதிராஜா,** பரமத்தி வேலூர்.
14. திரு. **பாபுலால்,** பெங்களூர்.
15. திரு. **முரளி,** சென்னை.
16. திரு. **வீரப்பன்,** நெல்லை.
17. திரு. **அருணாச்சலம்,** நெல்லை.
18. திருமதி. **நிருபமா ஸ்ரீநாத்,** சென்னை.
19. திருமதி. **வடிவம்மாள்,** சென்னை.
20. திரு. ஹீலர். **சுரேஷ்,** சென்னை.
21. திரு. **ஹரி கிருஷ்ணன்,** சென்னை.

புரவலர்களாக தங்களை இணைத்துக் கொண்ட அனைவருக்கும் ஸ்ரீபகவத் மிஷன் சார்பில் உளமார்ந்த நன்றியையும் பாராட்டுகளையும் தெரிவித்துக் கொள்கிறோம். வாய்ப்புள்ளவர்கள் புரவலர்களாக இணைந்து உதவிட வேண்டுகிறோம். வங்கிக் கணக்கில் நேரடியாக செலுத்துபவர்கள் **HDFC Bank- Sri Bagavath Mission A/c No. 15907620000075, NEFT IFSC: HDFC 0001590 Car Street Branch, Salem.** என்ற கணக்கில் செலுத்தலாம். **Bank A/C** ல் நேரடியாக செலுத்தியவர்கள் தகவலை **97891 65555** என்ற எண்ணிற்கு தெரிவிக்க வேண்டுகிறோம்.



**K.S. ஜீவமணி**
செல் : 97891-65555



# ஆசிரியர் பகுதி

அனைவருக்கும் சகப் பயணியின் வணக்கம்,

மையிலாடுதுறையில் ஸ்ரீ பகவத் ஐயாவின் இரண்டு நாள் ஞான முகாம் மே மாதம் 6 மற்றும் 7ஆம் தேதிகளில் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. இது கட்டணம் எதுவும் இல்லாமல் இலவசமாக நடைபெற்றது. மையிலாடுதுறை ஞானமுகாம் மிகச் சிறப்பாக நடைபெற அதற்கான செலவுகளை ஏற்றுக் கொண்டதோடு தங்களது உழைப்பை ஊக்கமுடனும் மிகுந்த அன்புடனும் வழங்கிய திரு.**இராஜவேலன் - ராஜகுமாரி** தம்பதியர் திரு.**ஷீதல்குமார்,** திரு. **கார்த்திகேயன்- காயத்திரி** தம்பதியர் அவர்களுக்கும் அவர்களுக்கு எல்லா வகையிலும் துணை நின்ற திரு.**முத்துச்செல்வன்,** திரு.**விஜய்ஆனந்த்,** திரு. **இராஜேஷ் கண்ணன்,** திருமதி. **முத்துலட்சுமி சரவணன்,** திருமதி. **சுரபி,** திரு.**வெங்கடேசன்- லதா** தம்பதியர் மற்றும் திரு.**செந்தில்வேலவன் - நளினி** தம்பதியர் ஆகிய அனைவருக்கும் உளமார்ந்த நன்றியையும் பாராட்டுகளையும் தெரிவித்துக்கொள்கிறோம்.

ஸ்ரீபகவத் ஐயா அவர்களால் புரிதலாக எளிமையாக்கப்பட்ட மெய்ஞானம், பல நல்ல உள்ளங்களின் பங்களிப்பாலும் தொண்டாலும் தேடுதல் கொண்ட பலருக்கு சென்றடைந்து கொண்டிருக்கிறது.

இந்த ஞானத்தை புரிந்து கொண்ட பலர் தங்கள் வாழ்வில் பல நல்ல மாற்றங்களை கண்டு விடுதலையோடு முழுமையாக வாழ்ந்து வந்து கொண்டிருக்கிறார்கள்.

ஓர் உண்மை புரியாத வரை அது புதிராகவும் எளிதில் அடைய முடியாத ஒன்றாகவும் தோன்றும்.

ஆனால் அந்த உண்மையைச் சரியான கோணத்தில் புரிந்து கொள்ளும் போது அது மிகவும் எளிமையானதாகவும் சர்வ சாதாரணமானதாகவும் மாறி விடும்.

அதுபோலத்தான் இதுவரை வந்த ஞானிகள் தாங்கள் அடைந்த ஞானத்தைப் பற்றியும் முக்தியைப் பற்றியும் சரியாக விளக்க முடியாத காரணத்தாலேயே கடைசி வரை குருவானவர் கற்றுக் கொடுப்பவராகவும் சீடர்கள் கடைசி வரை இன்னும் கற்றுக் கொள்ள வேண்டியவர்களாகவுமே இருந்திருக்கிறார்கள்.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள்தான், தான் பெற்ற ஞானத்தை சரியான கோணத்தில் புரிதலாக கொடுக்கும் போது அதை புரிந்து கொள்ளும் அனைவருக்கும் ஞானம் அவர்களுக்கே சொந்தமானதாகவும் மாறிவிடுகிறது. மேலும் அவர்களுக்கு வழி காட்டக் கூடிய சுய ஒளியாகவும் அவர்களை மாற்றி விடுகிறது.

இவ்வாறு பகவத் ஐயாவால் பயனடைந்தவர்களில் பலர் மற்றவர்களுக்கு எடுத்துக் கூறும் வல்லமை பெற்றவர்களாகவும் இருக்கிறார்கள்.

இப்படி மற்றவர்களுக்கு எடுத்துக் கூறுபவர்களில் சிலர் தங்களது புலமையை வெளிப்படுத்துவதற்காக பல வார்த்தை ஜாலங்களை சேர்த்து விளக்கி விடுகிறார்கள். இதனால் இதனை புரிந்து கொள்பவர்களுக்கு மீண்டும் ஒரு புரியாத புதிரைப் போலவே தோன்றிவிடுகிறது.

நமது புலமையை வெளிப்படுத்துதை விட மற்றவர்கள் புரிந்து கொள்ளும் வண்ணம் எளிமைபடுத்துவதே சிறப்பு.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களால் எளிமையாக்கப்பட்ட ஞானம் அதன் எளிமை மாறாமல் உலகமக்கள் அனைவரையும் சென்றடைந்து அனைவருக்கும் பயனடைய வேண்டும். அதற்கு ஞானத் தெளிவு பெற்ற நாம் அனைவரும் உறுதுணையாக இருப்போமாக.

## ஞானப் புரிதலில் ஏற்படும் சந்தேகங்களில் தெளிவு பெற...

ஸ்ரீ பகவத் ஐயாவின் நூல்கள் பல படித்திருந்தாலும் நடைமுறையில் நமக்கு ஏற்படும் ஐயங்களை ஐயாவிடம் கேட்டு தெளிவு பெறுவது மிகவும் அவசியம். இதனை கருத்தில் கொண்டு **Whatsapp Group** ஒன்று ஏற்படுத்தப் பட்டுள்ளது. இந்த குரூப்பில் தங்களை இணைத்துக் கொண்டு தங்களுக்கு ஏற்படும் கேள்விகளை இதில் தெரிவிக்கலாம். ஒவ்வொரு வாரமும் ஞாயிறு மாலை 6:30 மணி முதல் 8:00 மணி வரை **Google Hangouts** மூலம் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களுடன் நேரடி **(Live)** சத்சங்கம் நடைபெறும். இதில் நமது அனைத்து சந்தேகங்களுக்கும் ஐயாவிடம் இருந்து விடை பெறலாம். தங்களுக்கு ஏற்படும் ஐயங்களுக்கான பதில் மற்றவர்களுக்கும் பயனுள்ள வகையில் அமையும் என்பதால் இந்த ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. உங்களது கேள்விகளை பதிவிடுவதற்கு **Scan QR or Barcode** என்ற **App** பயன்படுத்தி கீழ்கண்ட **QR- Code**-டை **Scan** செய்து **Whatsapp Group** –ல் இணைந்து கொள்ளலாம்.



மேலும் விபரங்களுக்கு : ஸ்ரீ பகவத் மிஷன், சென்னை. **செல் : 95512 53636, 94444 02986**



# ஸ்ரீ பகவத் பவனில் 2 நாள் ஞானமுகாம்

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் இரண்டு நாள் ஞானமுகாம் வருகின்ற ஜுலை மாதம் சேலம், ஸ்ரீ பகவத் பவனில் நடைபெற உள்ளது.

இடம்: **ஸ்ரீ பகவத் பவன்,** ஜருகு மலை அடிவாரம்,
கொடம்பக்காடு, பெரிய கவுண்டாபுரம், காரிப்பட்டி (Po.), சேலம்-636106.

நாள்: **8.7.17 சனிக் கிழமை காலை 8.00 மணி முதல்**
**9.7.17 ஞாயிறு மதியம் 3.00 மணி வரை**

ஞான முகாமில் கலந்து கொள்பவர்கள், வெள்ளிக்கிழமை (7.7.17) மாலையே ஸ்ரீ பகவத் பவன் வந்து தங்கிக் கொள்ளலாம். உங்கள் வருகையை முன் அறிவிப்பு செய்யுமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

ஞானமுகாமில் கலந்து கொள்ள கட்டணம் எதுவும் இல்லை **அனுமதி இலவசம்.**

**நன்கொடைகள் வரவேற்கப்படுகின்றன.**

## நிகழ்ச்சி நிரல்:

### 8/7/2017 சனிக் கிழமை

| | | |
|---|---|---|
| காலை | 6.30 | - **தேனீர்** |
| | 8.30 to 9.30 | - **காலை உணவு** |
| | 9.30 to 10.00 | - **வருகை பதிவு** |
| | 10.00 to 11.30 | - **ஞான முகாம் வகுப்பு** |
| | 11.30 to 11.45 | - **தேனீர் இடைவேளை** |
| | 11.45 to 1.30 | - **ஞான முகாம் வகுப்பு** |
| மதியம் | 1.30 to 2.30 | - **மதிய உணவு** |
| | 2.30 to 5.30 | - **ஓய்வு** |
| | 5.30 to 6.00 | - **தேனீர் நேரம்** |
| | 6.00 to 8.00 | - **ஞான முகாம் வகுப்பு** |
| இரவு | 8.00 to 9.00 | - **இரவு உணவு** |
| | 9.00 to 10.00 | - **கலந்துரையாடல்** |

### 9/7/2017 ஞாயிற்றுக் கிழமை

| | | |
|---|---|---|
| காலை | 6.30 | - **தேனீர்** |
| | 8.00 to 9.00 | - **காலை உணவு** |
| | 9.30 to 11.00 | - **ஞான முகாம் வகுப்பு** |
| | 11.00 to 11.15 | - **தேனீர் இடைவேளை** |
| | 11.15 to 1.00 | - **ஞான முகாம் வகுப்பு** |
| மதியம் | 1.00 to 1.30 | - **அனுபவ உரை** |
| | 1.30 to 2.30 | - **மதிய உணவு** |
| | | ஞான முகாம் நிறைவு |

அனைவரும் வருக! ஞானத் தெளிவு பெறுக...

- ஆண்கள் மற்றும் பெண்கள் தங்குவதற்கென தனித்தனி இடவசதி உள்ளன.
- ஞான முகாமில் 70 அன்பர்கள் மட்டுமே கலந்து கொள்ள இடமிருப்பதால் முன்பதிவு அவசியம்.

**முன்பதிவிற்கு**

- கலந்து கொள்பவர்களின் பெயர், முழு முகவரி, செல் நெம்பர் ஆகியவற்றை July Gnanamuhaam என Type செய்து SMS அனுப்ப வேண்டிய எண்: 99422 1906

**வழித் தடம் :** Google Map-ல் Sri Bagavath Bhavan என Search செய்தால் Route Map கிடைத்து விடும்.
சேலம் ஜங்சன் இரயில் நிலையம் - புதிய பேருந்து நிலையம் - ஆத்தூர் வழி
அயோத்தியாபட்டிணம் பஸ் ஸ்டாப் - (பெரியகவுண்டாபுரம் செல்ல மினி பஸ் (அ) ஆட்டோ கிடைக்கும்.)
பெரிய கவுண்டாபுரம் - (கொடம்பக் காடு) **ஸ்ரீ பகவத் பவன் ஆஸ்ரம்.**

அன்புடன்,
ஸ்ரீ பகவத் மிஷன், சேலம்-636003.
99942 05880, 97891 65555

# நிகழ்ச்சி நிழல்கள்




மயிலாடுதுறை ஞான முகாமில் ஐயாவின் உரை...



மயிலாடுதுறை ஞான முகாமில் கலந்து கொண்டவர்கள்



மலையேற்றதிற்கு பிறகு
ஐயாவுடன் அன்பர்கள் ஓய்வு



மலை உச்சியில் ஞானத்தின்
விளக்கம்...



மலையேற்றதிற்கு பிறகு
ஐயாவுடன் அன்பர்கள் ஓய்வு



மயிலாடுதுறையில் அன்பர்களுடன் ஐயா



சென்னை வெஸ்ட் மாம்பலம் சத்சங்கத்தில்...

ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்கள் அனைவருக்கும் வணக்கம்,

நமது ஸ்ரீ பகவத் ஐயாவின் இல்லமான பகவத் பவனில் ஐயாவை சந்தித்து உரையாடி தெளிவு பெற பலரும் வந்த வண்ணம் உள்ளனர். வருபவர்கள் தங்கிச் செல்வதற்கான வசதியும் அவர்களுக்கான உணவும் சிறந்த முறையில் ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது. இது எப்போதும் சிறப்பாக நடைபெற வேண்டும் என்பதே நமது ஐயாவின் விருப்பம். அந்த வகையில் ஐயாவை சந்திக்க வருபவர்களும் தெளிவு பெற்று மகிழ்ச்சியுடன் திரும்புகின்றனர். நமது பகவத் பவன் இல்லமானது இதன் நிறுவனர்களாக இணைந்த பலரின் பங்களிப்பின் பேருதவியால் உருவாக்கப்பட்டுள்ளது. அதே போல் நமது ஸ்ரீ பகவத் பவனின் மாதாந்திர செலவுகளை எதிர்கொள்ள பலரும் புரவலர்களாக இணைந்து உதவி புரிந்து வருகிறார்கள். அவர்கள் அனைவருக்கும் மனமார்ந்த நன்றியை தெரிவித்துக் கொள்கிறோம்.

ஸ்ரீ பகவத் மிஷனின் வளர்ச்சி பணிக்காக இன்னும் 54 நிறுவனர்கள் தேவைப்படும் நிலையில் ரூபாய்.25000/- நன்கொடையாக வழங்கி ஸ்ரீ பகவத் மிஷனின் நிறுவனராக (Founder) இணைத்துக் கொண்ட

1. திரு. **Dr. ஞானசேகரன்** B.H.M.S. திருச்சி.
2. திரு. **வெங்கடேசன்** - **லதா** தம்பதியினர், சீர்காழி.

அவர்களுக்கு ஸ்ரீ பகவத் மிஷன் சார்பில் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

பகவத் ஐயாவின் கருத்துக்களை புரிந்து கொண்டவர்கள் வாய்ப்புள்ளவர்களாக இருக்கும் பட்சத்தில் நன்கொடைகளை வழங்கி நிறுவனர்களாக இணைந்து ஞானத் தெளிவை அனைவருக்கும் எடுத்துச் செல்லும் ஸ்ரீ பகவத் மிஷனின் தொண்டில் தங்களையும் இணைத்துக் கொள்ளுமாறு பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

**Sri Bagavath Mission HDFC A/c No. : 15907620000075 NEFT IFSC: HDFC 0001590 Car Street Branch, Salem.**






ஜென் கதை

# இசையும், இசை ஞானியும்

ஒருவன் தன்னுடைய மனதில் தோன்றும் எதிர்மறை எண்ணத்தை தாங்க முடியாமல் பல ஆண்டுகளாக மிகவும் வருந்தினான். வாழ்க்கையே ஒரு நிறைவு இல்லாத தன்மையில் ஓடிக் கொண்டு இருப்பதாக உணர்ந்தான். தன்னுடைய உண்மை நிலையை எண்ணி தனக்குள்ளே புழுவாய் துடித்தான். எதிர்மறை எண்ணங்களை மாற்றுவதற்காக பலவிதமான முயற்சிகளை மேற்கொண்டான். எந்த மாற்றமும் ஏற்படவில்லை. எதிர்மறை எண்ணமே விஸ்வரூபமாக எதிர்த்து நின்றது. வேறு எந்த வழியும் தெரியாமல் தடுமாறிப் போய் ஓர் வாழும் ஞானியை சந்தித்து தன்னுடைய உண்மை நிலையைக் கொட்டித் தீர்த்தான்.

ஞானி அமைதியாக அவன் மனம் திறந்து கொட்டுவதற்கு முழுச் சுதந்திரம் கொடுத்தார்.

“சாமி எனக்கு தோன்றும் எதிர்மறை எண்ணத்திற்கு என்ன செய்வது?” எனக் கேட்டான்.

“நீ எதை எதிர்மறை எண்ணம் என்று சொல்கிறாய்?” என்றார் ஞானி.

“ஒரு வேலையைச் செய்யத் தொடங்கும் போதே அந்த வேலை மோசமாக முடிந்து விடுமோ சரியாக நடக்காமல் போய் விடுமோ என்ற பயம் ஏற்படுகிறது. வேலையை நன்றாக செய்து விடலாம் என்ற நம்பிக்கைக்கு பதிலாக மோசமாக முடிந்து விடுமோ என்ற பய உணர்வே ஏற்படுகிறது.” எனக் கூறி வருந்தினான்.

“அடுத்து வேறு என்ன?” என்றார் ஞானி.

யாரையாவது புதியதாக பார்க்கும்போதோ பேசும் போதோ அவர்கள் மோசமானவர்களாக இருப்பார்களோ, நம்மை ஏமாற்றி விடுவார்களோ என்று தோன்றுகிறது. இப்படி எந்த விசயத்திலும் நான் சந்திக்கும் சூழ்நிலையிலும், செயலிலும்

எதிர்மறை எண்ணம் மட்டுமே வருகிறது. இதனால் நான் மிகவும் மன வேதனை அடைகின்றேன். எதிர்மறை எண்ணத்தை மாற்ற சங்கல்பமும் செய்து பார்த்து விட்டேன்" என்றான்.

"என்ன சங்கல்ப்பம்?" என்றார் ஞானி.

"ஒரு வேலையை செய்வதற்கு முன்பாக 'என் செயல் வெற்றி அடையும். நான் வெற்றி பெறுவேன்' என எனக்கு நானே சொல்லிக் கொள்வேன். அப்படிச் சொல்லி அந்தச் செயலை செய்யும் போதும் கைகளில் நடுக்கமும் மனதில் பயமும் தான் ஏற்படுகிறது. இறுதியாக தோல்விதான் ஏற்படுகிறது. இதிலிருந்து எப்படி விடுபடுவது?" என்றான்.

"நம்மால் மனதை ஒருபோதும் சரிபடுத்த முடியாது. மனம் என்பது இயற்கை கொடுத்திருக்கும் மிக அற்புதமான கருவி. அதை எப்படி பயன்படுத்துவது என்பதை தெரிந்து கொண்டால் போதும். மனதில் தோன்றும் அத்தனையுமே நம் உதவிக்கே வருகிறது. மனதில் தோன்றும் நேர்மறை, எதிர்மறை எண்ணம் நமக்கு கட்டுப்பட்டது கிடையாது. மனதில் தோன்றியதை நம்மால் உணர மட்டுமே முடியும்." என்றார் ஞானி.

"சாமி இன்னும் கொஞ்சம் புரியும்படி சொல்லுங்கள்" என்றான்.

"மனதில் எண்ணம் தோன்றுவது என்பது திரையில் தோன்றும் காட்சியை போன்றது. காட்சியை இன்னது என்று மனதால் உணர்ந்து கொள்ள முடியும். காட்சியை உணர்ந்து கொண்டு பிறகு மேற்கொண்டு செய்ய வேண்டிய செயலுக்கு என்ன செய்ய முடியுமோ அதை செய்து கொள்ளலாம். செயல் தேவையில்லை எனில் விட்டுவிடலாம். ஆனால் காட்சியை ஒருபோதும் மாற்ற முடியாது; மாற்றத் தேவையில்லை" என்றார் ஞானி.

"அப்படி என்றால் எதிர்மறை எண்ணத்தினால் பாதிப்பு ஏற்பட்டு விடாதா?" எனக் கேட்டான் அவன்.

உனக்கு ஏற்படும் பயத்தை ஒன்றும் செய்ய முடியாது. பயத்தை தூண்டு கோலாக எடுத்துக் கொண்டு அந்த சூழ்நிலையில் கவனமாகவும், பாதுகாப்பாகவும் செயல்படுவதற்கு அந்த பயமே தான் உதவிக்கு வருகிறது. பயம் தான் அந்த செயலை முழுமையாக கவனமாக செய்வதற்கான உந்து சக்தியாக இருக்கிறது. பயமே செயலை சரியாக செய்து முடிப்பதற்கு உதவியாக வருகிறது.

"இது புரிகிறது சாமி, நான் ஒருவரை பார்க்கும் போது அவர் கெட்டவராகவும், சரியில்லாத நபராகவும் எனக்கு தெரிகிறது. அவர் நல்லவராக கூட இருக்கலாம் ஆனால் எனக்கு கெட்டவராக தெரிகிறது. இங்கு நான் என்ன செய்வது?" என்றான்.

"உண்மையில் அந்த நபர் நல்லவரா, கெட்டவரா என்பது நமக்கு தெரியாது. அந்த நபர் கெட்டவர் என்ற எண்ணம் வரும் போது தான் அவரிடம் நாம் எச்சரிக்கையாகவும், பாதுகாப்பாகவும் பழக முடியும். நாம் விழிப்புணர்வுடன் நடந்து கொள்ள ஓர் வாய்ப்பு. அவருடன் பழக, பழக தான் நல்லவரா, கெட்டவரா என்பது நமக்கே தெரிந்து விடும். இந்த எதிர்மறை எண்ணமும் நம் சரியான செயல்பாட்டிற்குத் தேவையான உதவியாகவே வருகிறது." என்றார் ஞானி.

"இது எல்லாம் சரி சாமி, தேவையற்ற காம சிந்தனை ஏற்படுகிறது அதற்கு என்ன செய்வது?" என்றான்.

"ஒரு இசைக்கருவியில் எல்லா சப்தங்களும் வர வேண்டும். அப்படி எல்லா சப்தங்களும் வந்தால் தான் அது இசை பெட்டி. அந்த சப்தங்களை ஏற்ற இறக்கத்துடன் ஒருங்கிணைத்து இசைக்கும் போது ஓர் இனிமையான ராகமாக வெளிப்படும். நம்முடைய வேலை, சப்தங்களை நீக்குவது அல்ல. ஓர் இனிமையான ராகத்திற்கு சப்தங்களை எங்கே கூட்ட வேண்டும், எங்கே குறைக்க வேண்டும் என்று தெரிந்து கொண்டு இசைப்பது மட்டுமே. இப்படி நமக்கு ஏற்படும் எல்லா எண்ண உணர்வுகளையும் தேவைக்கு ஏற்ப மீட்ட தெரிந்து கொண்டால் போதும்" என்றார் ஞானி.

"நமது மனம் என்னும் இசைக்கருவியை மாற்றத் தேவையில்லை. அதனை சரியாக பயன்படுத்திக் கொள்வதின் மூலம் இனிமையான ராகத்தை உருவாக்கலாம். அப்படி தானே சாமி " என்றான் அவன்.

ஞானி, "ஆமாம் இசை கருவி சரியாகவே உள்ளது. அதை மாற்றத் தேவையில்லை. உன் தேவைக்கு ஏற்ப சரியாக இசைத்துக் கொள்" என்றார் ஞானி.

**அனைத்து சப்தங்களுமே தேவை!!**

**தேவைக்கேற்ப மீட்ட தெரிந்தால் போதும். அப்படி மீட்டத் தெரிந்தால் நாம் அனைவரும் மனம் என்னும் இசைக்கருவியை இசைக்கத் தெரிந்த இசை ஞானியே...!!**



Registration Number of the News Paper TNTAM/2014/57698 Postal Registration Number : TN/WR/SLM(E)/22/2015-2017

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555